

பகவான் ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சத்ய சாயிபாபா
சிவ சக்தி



ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் "எவனொருவன் சந்தேகம் கொள்கிறானோ அவன் அழிவை ஆட் கொள்வான்" என்று கூறியுள்ளார். அதாவது எவனொருவன் பகவானை நேரில் கண்டு அவர் ஒரு மானிடப பிறவி என்று எண்ணுகின்றானோ அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் ஓர் அரிய சந்தர்பத்தை நழுவவிடுவான.

இன்றைய தினம்கூட இக் கூற்று உண்மையாக உள்ளது என்பதை அன்று ஸ்ரீ கிருஷ்ணனாக அவதாரமெடுத்த அதே பகவான் மறுபடி பகவான் ஸ்ரீ சத்ய சாயி பாபாவாக தோன்றியுளளார் என்பதிலிருந்து அறியலாம். பகவான் ஸ்ரீ சத்ய சாயிபாபாவும் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப் போலவே நம்மை எல்லாம் அவரிடம் நம்பிக்கை ஏற்படும்படி செய்ய, தன் அவதார மஹிமையை எண்ணற்ற அற்புத லீலைகள் மூலம் தன்னுடைய சிறுவயதிலிருந்தே காட்டியுள்ளார். நம் எல்லோரையும் தன்னிடம் அழைத்துக்கொள்ள தன்னுடைய அருட் கடாக்ஷத்தினால் தினந்தோறும் தன் தெய்வீகத் தன்மையை, புட்டபர்த்தி சென்று அவரை தரிசிப்பவர்களுக்கு மட்டுமின்றி, யார் எந்த இடத்தில் இருந்து கொண்டு கஷ்டப்படுகையில் அவரை நினைத்தாலும் அவர்

களுக்கும் பற்பல நிகழ்ச்சிகள்மூலம் நிரூபித்து வருகின்றார். இவ்வளவு தெரிந்திருந்தும் மக்களுக்கு அவரிடத்தில் நம்பிக்கை ஏற்படாமலிருப்பின் அல்லது அவர் மீது ஏற்பட்டுள்ள நம்பிக்கை உறுதியாகவோ அல்லது வேரூன்றியதாகவோ இல்லாமலிருப்பின் நாம் அத்தகையவர்களுக்கு ஆரம்பத்தில் கூறப்பட்ட கீதை வாக்கியத்தைத்தான் நினைவூட்ட வேண்டும்.

1963 ஜூலை மாத "சனாதன சாரதி" இதழில் பகவான் பாபாவின் ஓர் ஆச்சரியகரமான மஹிமையைப்பற்றி வெளிவந்துள்ள கட்டுரையானது இங்கு தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. நாம் அவரை தரிசிக்கும்பொருட்டு புட்டபர்த்திக்குச் சென்றாலும் அல்லது நாம் இருக்கும் இடத்திலிருந்து அவரைப் பிரார்த்தனை செய்தாலும், எப்படியிருப்பினும் நம் தமிழ் சகோதர சகோதரிகளின் கண்களை இன்று நமக்கு கிடைத்துள்ள "பேசும் தெய்வமான" பகவான் ஸ்ரீ சத்ய சாயிபாபாவை நோக்கித் திறக்க நினைப்பதே இந்த தமிழாக்கத்தின் நோக்கமாகும்.

இக் கட்டுரையை கவனமாகப் படியுங்கள். இக்கட்டுரையானது நமக்கு (1) பகவான் பாபா அவர்கள் எவர்களைத் தன் முக்கிய காரியமான தர்மத்தை நிலை நிறுத்துதல் நடைபெற கருவிகளாக எண்ணுகின்றாரோ அத்தகைய உண்மையான பக்தர்களை நோயிலிருந்து காப்பாற்ற அவர்களுடைய நோயைத் தாமே ஏற்றுக் கொள்ளுகிறார் என்றும் (2) அவர் ஒரு க்ஷண நேரத்தில் பயங்கரமான பக்கவாத நோயின கொடூரமான தன்மைகளிலிருந்து தன்னை மீட்டுக் கொள்ள முடியும் என்றும் (3) பாபா அவர்கள் சிவசக்தி சொரூபமே என்றும் (4) பாபா அவர்கள் வியாதியால் துன்பப்படுவது போல் (மற்ற

வர்களுக்கு) தோன்றியதுகூட சிவசக்தியின் ஒரு சங்கல்பமேயாகும் என்றும் புலப்படுத்தும்.

இந்த அற்புத நிகழ்ச்சியானது வைத்தியர்கள், விஞ்ஞான விற்பன்னர்கள், பல்வேறு தொழில் துறையைச்சேர்ந்த பிரமுகர்கள் உட்பட ஆயிரக்கணக்கானவர்களால் கண்டுகளிக்கப்பட்டது. அவர்கள் அனைவரும் இந்நிகழ்ச்சியைத் தங்களுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு மாபெரும் அரிய சந்தர்ப்பமாக நினைவு வைத்திருப்பார்கள். இந்த குரு பௌர்ணமி தினத்தில் அவர்கள் அனைவரும் தங்கள் குருவாக உமா மஹேஸ்வரரையே அடைந்தனர். எல்லா மக்களும் பகவான் பாபாவின் அருளை பெறுவாராக! சத்ய சாயி பக்தர்கள் தங்கள் சொத்தாக பெற்றுள்ள சுகத்தையும் சாந்தியையும் எல்லோரும் பங்கு கொள்வாராக !!

S. S. S.

என். கஸ்தூரி

S. S. S.

# சிவ சக்தி

---

28—6—'63 வெள்ளிக்கிழமை மாலை பிரசாந்தி நிலையத்தில் வழக்கம்போல் ஸ்வாமி பஜனை நடக்கும்பொழுது சிம்மாசனத்தில் அமர்ந்திருந்து பக்தர்களை களிப்பில் ஆழ்த்தினர். பஜனை முடிந்ததும் மறு நாளிலிருந்து ஒரு வாரத்திற்குத் தன் தரிசனமாவது பக்தர்களைத் தனிமையில் அழைப்பித்து கோரிக்கை அளிப்பதாவது நடைபெருது என்று அறிவித்துவிடச் செய்தார் இந்த அறிவிப்பு அங்கு குழுமியிருந்த பக்தர்கள் எல்லோருக்கும் மிகப் பெரிய திகைப்பை உண்டுபண்ணிற்று.

சனிக்கிழமை (29—6—'63) காலை 6-30 மணிக்கு மாடியில் தம் அறையில் திடீரென்று ஸ்வாமியின் உடல் நிலத்தில் வீழ்ந்தது. அவர் உடலில் மூளைக்கு சம்மந்தப்பட்ட பக்கவாத நோயின் தன்மைகள் தென்படலாயின. இடது கண்ணும், இடது கையும், இடது காலும் ஸ்வாதீனமிழந்தன வாய் இடதுபக்கமாக இழுத்துக்கொண்டதுடன் நாக்கும் குழறிற்று. சுய உணர்வையும் இழந்தார்.

இடி விழுந்தாற்போல் நடந்த இந்த சம்பவத்தை அறிந்து பிரசாந்தி நிலையமே துக்கத்தில் மூழ்கிற்று. ஸ்வாமியின் பக்தர் களாக உள்ள டாக்டர்கள் பலரும் கூடி பரிட்சை செய்து கலந்து ஆலோசித்த பின் னரும் வியாதி எத்தன்மையானது என்பது அவர்களுடைய அறிவிற்குப் பூரணமாக எட்டவில்லை. அவர்கள் என்ன செய்வது என்று தெரியாமல், ஓரளவு தெரிந்ததைச் செய்ய முடியாமலும் தத்தளித்தார்கள். அவர்களின் தத்தளிப்பினால் பக்தர்களுக்கு மேலும் பயம் அதிகரித்தது. கண்ணீர் சிந்திக் கதறுவதல்லாமல் பக்தர்கள் வேறு என்ன செய்யமுடியும் ?

நாடியோ மிகவும் சீர்குலைந்திருந்தது. நான்குமுறை பலமான தாக்குதல்கள் இரு தயத்திற்கு ஏற்பட்டன. ஒவ்வொன்றும் மிகவும் அபாயகரமானதாகவே இருந்தது. அத்துடன் தலைவலியும், மார்பு பூராவும் எரிச்சலும் வியர்வையும் அதிகமாக இருந் தது. மூன்று நாட்களாகப் பிரக்ஞை (சுய நினைவு) திரும்பவே இல்லை. இந்த நிலை யில் நீராகாரம்கூட அருந்த முடியாதது கண்டு, பெங்களூரிலிருந்து வந்திருந்த பிரக் யாதிபெற்ற டாக்டர் திரு. P, S. ராவ் அவர்

கள் இந்த வியாதியின் காரணமாக நொந்த உடலுக்கு அதைச் சகித்துக்கொள்ள சற்றேனும் ஆகாரச் சத்துக்களைக் கொடுத்தே ஆக வேண்டும் என்று வற்புறுத்தி க்ளுகோஸ் ஸெலைன் திரவத்தை (Glucose Saline Solution) ஊசி மூலம் நரம்பின் வழியாகச் செலுத்தவேண்டும் என்று கூறி அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்பொழுது, சுய உணர்வை இழந்ததுபோல் தென்பட்ட ஸ்வாமி அவர்கள், அத்தகைய நடவடிக்கை ஏதும் கூடாது என்று தடுத்துவிட்டார்கள். ஸ்வாமி தடுத்தபின்னர் யார்தான் என்ன செய்யமுடியும்? ஆகவே சூழ்ந்திருந்த பக்தர்கள் செய்வதறியாது மேலும் திகைத்தனர்.

ஸ்வாமி ஒரு ஸ்பூன் தண்ணீரைப் பருகினால் பிரசாந்தி நிலையத்தில் இருப்போர் முகமெல்லாம் மலரும்; அவர் உடலில் ஒரு டிகிரி உஷ்ணம் ஏறினவுடன் மலர்ந்த முகமெல்லாம் வாடும். இந்தவிதமாக முதல் மூன்று நாட்களும் மூன்று யுகங்களாக கழிந்தன.

மூன்றாம் நாள் மாலை, ஒரு சில பக்தர்களைத் தன் படுக்கையின் அருகே அழைத்து, " பயப்படவேண்டாம். தைரியமாக இருங்

கள். எனக்கு எந்தவிதமான கஷ்டமும் கிடையாது. பக்தர்கள் கஷ்டப்படுவதுதான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. வேளா வேளைக்குப் பக்தர்கள் எல்லோரும் சாப்பி டுங்கள். அதுவே என் ஆகாரமாகும்." என்று ஸ்வாமி கூறினார்கள். ஆனால் அவ ருடைய இந்த உத்திரவைமட்டும் பக்தர் களால் எப்படி நிறைவேற்றமுடியும்? அவர் களால் எப்படி சாப்பிடமுடியும்? தூங்கத் தான் முடியுமா? ஸ்வாமியின் ஆறையின் கீழுள்ள ஜன்னலின் பக்கமாக நின்று கொண்டு வேதனையின் காரணமாக அவர் முனகும் சப்தத்தைக் கேட்டு மனங்கலங்கி, "பகவானே! நீங்களே சீக்கிரத்தில் சொஸ்த்தம் செய்து கொள்ளுங்கள்" என்று அவரையே வேண்டிக்கொள்வது ஒன்று தான் பிரசாந்தி நிலையத்தில் குழுமியிருந்த பக்தர்கள் செய்த தவமாகும். அவ்வப் பொழுது அந்த வியாதிக்கான நிபுணரை அழைத்துவர பக்தர்கள் தயாராக புறப்படி னும் ஸ்வாமியின் உத்திரவின்றி புறப்பட ஒருவருக்கும் தைரியம் வரவில்லை.

அன்று தன்னுடைய உடல் நிலையைப் பற்றியும் அனுபவிக்கும் வியாதியைப்பற்றிய குறிப்புகளையும் தன்னைச் சூழ்ந்திருந்த பக்தர்

களுக்கும் டாக்டர்களுக்கும் ஸ்வாமி நிதான மாக ஈனஸ்வரத்தில் மெல்ல மெல்ல வெளி யிட்டார். பக்கவாத வியாதியில் அனுபவ முள்ள டாக்டர்களுக்குக்கூட ஸ்வாமி வெளிப்படுத்திய வியாதியின் பல இலட்ச ணங்கள் புதிதாகத் தோன்றின. வியாதி யின் சிகிச்சைமுறையிலும் பல புதுமை யான விஷயங்கள் தெரியவந்தன. எந் தெந்த காரணங்களினுல் பக்கவாத வியாதி வரலாமென்றும் தலைவலி, மார்பெரிச்சல் எதிலிருந்து ஏற்படுகிறது, இந்த வியாதியின் மூலமாக நரம்பு, இரத்த நாளங்கள், இரு தயம் ஆகியவைகளுக்கு ஏற்படும் மாற்றங் கள் என்னென்ன என்றெல்லாம் ஸ்வாமி தெரிவித்தார். ஐந்து நாள் கெடுவு பூர்த்தி ஆனவுடன் வலியும், எரிச்சலும் குறைந்து போகும் என்றும், இந்த உடலானதினுல் பயங்கரமான இருதயத் தாக்குதல்களையும் கடுமையான நோயையும் தாங்கலாயிற்று என்றும் கூறினுர்.

நான்காம் நாளும் முந்தைய மூன்று நாட்களைப்போன்றே பயத்திலும் பிரார்த் தனையிலும் கழிந்தது. ஐந்தாம் நாள் காலை புதன்கிழமை காலை 11 மணிக்கு வாதநோய் தன் உச்ச நிலையை அடைந்து ஸ்வாமியின்

உடலை மிகவும் பாதித்தது. பிற்பகல் 3 மணி வரை அதே நிலை நீடித்து, குழுமியிருந்த பக்தர்களையெல்லாம் துக்கசாகரத்தில் ஆழ்த்தியது. ஆனல் அன்று மாலை தனக்கு ஏற்பட்ட உச்சநிலைபற்றி ஸ்வாமி அவர்கள், "நான் அப்பொழுது உபாதையிலிருந்து வேருக இருந்துகொண்டு, இந்த உடலில் என்னென்ன நடக்கிறது என்று அதற்கு ஒட்டாமலேயே பரிட்சை செய்துகொண் டிருந்தேன். வியாதியின் உச்சநிலைக்கும் எனக்கும் எந்தவிதமான சம்மந்தமும் இருக்கவில்லை. இந்த ஓர் இரவுமட்டும் செல்லட்டும். நாளை காலை முதல் வலி, எரிச்சல் எதுவும் இருக்காது" என்று ஆறு தல் கூறினர்.

இந்த இடைவெளி காலத்திற்குள்ளாக ஸ்வாமியின் வியாதி விஷயமாக பலர் பல விதமாக கதைகள் பரப்ப ஆரம்பித்துவிட் டார்கள். "ஸ்வாமி மௌன விரதம் பூண் டுள்ளார்" "ஸ்வாமி ஏதோ நிஷ்டையில் இருக்கிருர்" என்றும், "ஸ்வாமிக்கு யாரோ துஷ்டர்கள் சூன்யம் செய்துவிட்டார்கள்" என்பது போன்ற கதைகளைக்கட்டிவிட்டார் கள். ஸ்வாமியின் உண்மை நிலையை அறி

யாதவர்கள்தான் இவைகளை நம்பினார்கள். ஆனால் ஸ்வாமி யார் என்பதை நன்கு அறிந்திருந்த பக்தர்கள் "இந்த அவதார புருஷன்மேல் யார் எதை ஏவமுடியும்? அவருக்கு மௌன விரதம் எதற்கு? நிஷ்டைதான் எதற்கு?" என்று கூறி அக்கட்டுக்கதைகளுக்குச் சற்றும் செவிசாய்க்க மறுத்துவிட்டார்கள்.

வியாழக்கிழமை காலை 6-30 மணிக்கு சரியாக ஐந்து நாட்கள் கெடு முடிந்தது. வலியும், எரிச்சலும் குறைந்தது என்று ஸ்வாமி அறிவித்தார். அதற்குள்ளாக பக்தர்களின் ஆவலை தரிசனம் தந்து, தீர்க்கவும் தீர்மானித்தார். ஆனால் ஸ்வாமிக்கு வலியும் எரிச்சலும் மட்டுமே குறைந்திருந்ததே யொழிய, ஆகாரங்கள் எதுவும் உட்கொள்ளாத காரணத்தால் அவரின் உடல் மிகவும் சோர்ந்து பலஹீனமாக இருந்தது. இடது காலை தூக்கவோ, மடக்கவோ முடியாமல் இழுத்துக்கொண்டே செல்லவேண்டிய நிலையில் வாயிற்படி தாண்டும்பொழுது வேறு ஒருவர் அந்தத் திருவடியைத் தூக்கி வைக்க வேண்டிய நிலையில் இடது கை சற்றும் அசைக்க முடியாமல், தொங்கின நிலையில், விரல்கள் முஷ்டி பிடித்த நிலையில், பேசுவது

தெளிவின்றி பேச முற்படும் சமயம் ஆயா சம் ஏற்படும் நிலையில், தனது வலது கை கூட எதையும் பிடித்துக்கொள்ளாத அள விற்கு நடுங்கிக்கொண்டு இருந்த நிலையில் அவர் பக்தர்களுக்குத் தரிசனம் தர விரும் பினார். குழுமியிருந்தவர்கள் வேண்டிக் கொண்டதனாலும் வருகின்ற சனிக்கிழமை 6—7—63ம் தேதி குரு பௌர்ணமியாக இருக்கின்ற காரணத்தினாலும் அந்த நாளில் தரிசனம் தர நிச்சயித்து, அதுபற்றி வெளி யிடச் சொன்னார்.

குரு பௌர்ணமி நாளும் வந்தது. ராஜஸ்தானம், ஆமதாபாத், பம்பாய், பெல் காம், பெங்களூர், கேரளா, மதுரை, கோவை, ஹைதராபாத், மதராஸ், கல்கத்தா, டாடா நகர் முதலான அநேக நகரங்களி லிருந்து ஆயிரக்கணக்கான பக்தர்கள் சத் குருவின் தரிசனத்திற்காக நிலையத்தில் கூடி இருந்தார்கள். மேலும் 7—7—63ம் தேதி ஞாயிற்றுக்கிழமை ஸ்வாமியிடம் முன் கூட் டியே அனுமதிபெற்று அவருடைய சன்னிதி யிலேயே சஷ்டியப்த பூர்த்தி சாந்தி செய்து கொள்ள உடுமலைப்பேட்டை பக்தர் ஒரு வரும் அவருடைய சுற்றத்தார்கள் எல்லோ ரும் ஆவலுடன் வந்திருந்தார்கள். ஆனால்

ஸ்வாமி அவர்களுக்கு ஏற்பட்ட உபாதை யின் காரணமாக, குரு பௌர்ணமியன்று ஸ்வாமி தரிசனம் தருவதாகக் கூறியும் யார் முகத்திலும் மகிழ்ச்சி இல்லே. இந்த நிலே யில் தன்னுடைய உடல் சோர்ந்து பலஹீன மாக இருந்தும் தன்னே மாடியிலிருந்து கீழே பஜனே ஹாலுக்கு அவசியம் எடுத்துத்தான் செல்லவேண்டுமென்று சுவாமிகள் கட்டளே இட்டுவிட்டார்.

மாலே 5 மணிக்கு சுவாமியின் உத்தரவு பேரில் பஜனே ஆரம்பமாயிற்று. 6 மணிக்கு அவரை அவருடைய அறையிலிருந்து மிக வும் குறுகலானதும் வளேவு உள்ளதுமான மாடிப்படிகளில் அதிஜாக்கிரதையாக படிக் குப்படி சற்று ஓய்வு அளித்து, கை கால்கள் எங்கும் அடிபடாமல் பக்தர்களுக்குக் கோரிக்கை தர உபயோகிக்கும் அறைக்கு கொண்டு வரப்பட்டு, அங்கு சற்று நிறுத்தி அவரை வெளியில் கொண்டுவர கதவைத் திறந்தார்கள். சுவாமிகள் இருந்த நிலேமை யையும் அவரைக் கொண்டுவந்த முறையை யும் பார்த்துக் கலங்காத கண்களே கிடை யாது. கதரு த வாய் கிடையாது. சோகமே உருவாகி எல்லோரும் ஏக்கத்துடன் ஸ்வாமியைப் பார்த்துக்கொண்டிருந்தார்

கள். ஸ்வாமி, தலைக்கு வெள்ளைத் துணியை முகத்தின் முக்கால் பாகம் மறையும் அளவுக்குக் கட்டிக்கொண்டு, இடது கை தொங்கிக்கொண்டு இடது கால் ஒரே விரைப்பாக இருக்க, வலது பக்கத்தைத் திரு ராஜாரெட்டி தாங்கிக்கொண்டு (ஏன் தூக்கிக் கொண்டேவந்த காட்சி) எந்த கல் மனத்தைத்தான் கரைக்காது என்றால் ஸ்வாமியையே தங்கள் உயிராக வைத்திருக்கும் பக்தர்களின் நிலை எப்படி இருக்கும் ?

மிகவும் நிதானமாக ஸ்வாமியைச் சிம்மாசனத்தில் பக்கங்களில் நிறைய திண்டுகளை அடுக்கி, உட்காரவைத்தார்கள் ஈனஸ்வரத்துடன் ஸ்வாமி அருள்புரிந்த சில வார்த்தைகளைக் கடந்த எட்டு நாட்களாக அவரின் அருகிலேயே இருந்து, அவரின் குழறிய வார்த்தைகளைப் புரிந்துகொள்ளும் அனுபவம்பெற்றிருந்த திரு கஸ்தூரி அவர்கள் ஒலிபெருக்கியில் "எவரும் பயப்பட வேண்டிய அவசியம் இல்லை. தைரியமாக இருங்கள். இது ஸ்வாமிக்கு வந்த வியாதியல்ல. ஸ்வாமியை எந்தக் காலத்திலும் எந்தவிதமான வியாதியும் அணுகவே முடியாது. இது வாங்கிக் கொண்ட வியாதி. இதற்காக யாரும் மனக்கஷ்டம் அடையக் கூடாது"

என்று ஸ்வாமி கட்டளை இடுவதாகக் கூறினார்.

பிறகு தன் முன்பாக மைக்கைப் பிடித்துக் கொள்ள சமிக்ஞை செய்து, மிகவும் பிரயாசைப்பட்டு, ஏதோ ஒரு வார்த்தையைச் சொல்ல முயன்றார். "புரிகிறதா" என்ற அவ்வார்த்தை யாருக்குமே புரியாமல் போய்விட்டது. அவர் பேச முயன்ற சமயம் பட்ட வேதனையைக்கண்டு பக்தர்கள் கதற ஆரம்பித்துவிட்டார்கள். பேச முயன்ற சிரமத்தினால் ஸ்வாமிக்கு தாகம் ஏற்பட்டதோ என்னவோ என்று எண்ணும்படி தண்ணீர் தரும்படி கேட்டார். தண்ணீர் உள்ள வெள்ளி டம்ளரைக்கூட தனது வலக்கையால் பிடிக்க முடியாமற்போகவே திரு ராஜா ரெட்டியே அந்த டம்ளரைப் பிடித்துக் கொண்டார். அப்பொழுது டம்ளருள் ஸ்வாமி தனது வலது கையைவிட்டு நனைத்துக்கொண்டு சற்று நீரையும் பருகினார். மீதமிருந்த நீரையே தனது இடது கை மீதும், இடது கால் மீதும் தெளித்துக் கொண்டு, வலது கையால் இடது கையைத் தடவினார். சகிக்க முடியாத எரிச்சலைக் குறைக்க அப்படிச் செய்கிறாரோ என்னவோ என்று சிலர் ஊகிக்க ஆரம்பித்தனர்.

இல்லை! இல்லை!! அதோ தனது இடது கையை மடிக்கின்றூரே! முஷ்டி விரிந்து விரல்கள் எல்லாம் தெரிகின்றனவே! அதோ இரண்டு கைகளாலும் இடது காலை தடவுகின்றூரே! ஆகா! எப்பொழுதும் போல நேராக நிமிர்ந்தல்லவா உட்காருகிறூர். பாருங்கள்; இரண்டு கைகளையும் தூக்கி விரித்து பக்தர்களை "ப்ரேமஸ்வரூபுலாரா" என ஆசீர்வதிக்கின்றூர். அதோ கேளுங்கள் அவருடைய வழக்கமான அமுதினும் இனிய. மதுரமொழியை!

என்னே ஆச்சரியம்? எல்லோரும் ஆனந்தக் கண்ணீர் சொரிந்துகொண்டு ஜெய கோஷங்கள் முழங்கிக்கொண்டு ஆனந்த பரவச நிலையில் இருந்தார்கள். அங்கிருந்த டாக்டர்கள் Dr. B. G. கிருஷ்ணமூர்த்தி, Dr. B. சீதாராமையயா, Dr. M. பானு, Dr. R. கோபாலன், Dr. A. கிருஷ்ணராவ் முதலியவர்கள் இந்த அதிசய நிகழ்ச்சியைக் கண்டு பிரமித்து சிலையானூர்கள்.

ஸ்வாமி மேலும் தொடர்ந்து பேசலானூர் "திக்கு இல்லாதவனுக்கு தெய்வமே துணை என்கின்றபடி, ஓர் அனுதை பக்தனுடைய நோயையும் வேதனையையும் நான்

எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அவன் இந்த பக்க வாதத்தையும் இருதய நோயையும் ஐந்து நாட்கள் அனுபவிக்க கெடு இருந்தது. ஆனல் அவனுக்கு நோயைத் தாங்கும் சக்தி கிடையாது. ஆகவே அந்த நோய்களை அப்படியே நான் ஏற்றுக் கொண்டேன். இந்த சம்பவத்திற்கு ஒரு மூலகாரணமும் உண்டு. அது புராதனமான காரணம். கடந்த 38 ஆண்டுகளாக நான் இதை வெளிப்படுத்தவில்லை. இப்பொழுது நேரம் வந்ததனல் வெளியிடுகின்றேன்.

"திரேதா யுகத்தில் ஒரு சமயம் பரத்வாஜ மகரிஷி யாகம் செய்ய நினைத்து அதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்துவிட்டு, அதிஷ்டான தேவதையாக சக்தியே அமர்ந்திருந்து அந்த யாகத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று பிரார்த்திக்கும் பொருட்டு கைலயங்கிரிக்குச்சென்ருர். அது சமயம் அங்கு சிவசக்தி இருவரும் (தாண்டவ) நர்த்தனத்தில் ஈடுபட்டு யார் முதலில் களைப்படைந்து நிற்கின்ருர்களோ அவர்கள் தோல்வி அடைந்ததாக ஒப்பவேண்டுமென்றுபோட்டியிட்டுக்கொண்டு நர்த்தனமாடிக்கொண்டிருந்தார்கள். அந்த நர்த்தனத்திலேயே

லயித்திருந்ததின் காரணமாகப் பரத்வாஜரின் வருகையையும் தன்னை அழைப்பதற்காகச் செய்த தவத்தையும் தேவி கவனிக்கவில்லை. எட்டு நாட்கள் கழிந்தன அப்பொழுதும் நர்த்தனம் ஓயவில்லை. சிவபெருமான் தேவியிடம் பக்தனின் வருகையைப் பற்றிக் கூறியதும் சக்தி நர்த்தனம் ஆடிக்கொண்டே பரத்வாஜர் இருக்கும் திசையை நோக்கிச் சிரித்தாள். அந்தச் சிரிப்பைத் தவருக அர்த்தம் செய்து கொண்டு கோபத்துடன் அவர் வெளியில் செல்ல முயற்சித்த சமயம் அவருடைய இடது காலும் இடது கையும் உணர்விழந்து மறத்துப் போயின. வாயும் கோணி நாக்கும் குழறியது. உடனே சிவபெருமான் தன் கமண்டலத்திலிருந்து நீர் எடுத்து பாரத்வாஜர் கை, கால்கள்மேல் தெளித்து ஒரு நொடியில் அவருக்கு ஏற்பட்ட வேதனையைப்போக்கியதுடன் அல்லாமல் சக்தியின் சிரிப்பு அனுக்கிரகமேயொழிய வேறில்லை என்று கூறினர். அவருடைய யாகத்திற்கு சக்தியுடன் தானும் எழுந்தருளுவதாக வரமளித்து அனுப்பிவைத்தார். யாகத்தின் பூரண ஆகுதியையும் ஏற்றுக்கொண்டு முனிவருக்கு வரத்தையும் அளித்தார்.

சிவசக்தியாகிய நாங்கள் இருவரும் உன் பரத்வாஜ கோத்ரத்தில் கலியுகத்தில் மூன்று முறை பிறப்போம். முதலில் ஷிர்டியில் சாயிபாபாவாக சக்தியும், இரண்டாவதாக இந்த ஸத்ய ஸாயியாக நானும் சக்தியும் இருவரும் சேர்ந்து பிறப்போம். மூன்ருவதாக நான்மட்டும் பிரேம ஸாயியாக பிறப்பேன். அப்படி நானும் சக்தியும் சேர்ந்து உன் வமிசத்தில் பிறக்கும்பொழுது இந்த சக்தியினுடைய அசிரத்தையால் நீ எட்டு நாட்களாக அனுபவித்த உபாதைக்கு ஈடாக இவள் அது சமயம் அனுபவித்தே ஆகவேண்டும். அதுவும் தான் முதல் யாகத்தை நடத்தி முடித்து இரண்டாவது யாகத்தைத் துவங்குவதற்கு முன்னதாகவே அனுபவிக்கவேண்டும். அதுசமயம் நான் சக்தி மீது தீர்த்தம் தெளித்து அவளை நல்ல நிலைக்குக் கொண்டுவருவேன் என்றும் கூறிஞர்.

திரேத யுகத்தில் நடந்த அந்த சம்பவம் காரணமாக ஸ்வாமி அவர்களே சிவசக்தி சொரூபம். தனது இடது பாகமே சக்தி ஆனதிஞல் இடதுபாக கண், கை, கால், வாய் முதலானவைகள் வாதத் தன்மை அடைந்தன. வலது பாகம் சிவஞகையால்

தனது வலது கையால் தீர்த்தம் தெளித்து இடது பாகத்தை சொஸ்தப்படுத்தியது.

(சென்ற நவராத்திரி நாட்களில் முதல் யாகம் நடந்து முடிந்ததும், வருகின்ற நவராத்திரி நாட்களில் இரண்டாவது யாகம் நடக்க இருக்கின்றது என்பது நாம் அறிவோமல்லவா) அதன் காரணமாகத்தான் கடந்த எட்டு நாட்கள் இந்த நிகழ்ச்சி நடந்தது.

இது யுக யுகாந்திரமான விஷயம் அந்த அனுதை பக்தனின் வியாதியை ஒரு முகாந்திரமாக வைத்துக்கொண்டு முன் யுகத்தில் சிவ சக்திகள் செய்துகொண்ட சங்கல்பமே இப்பொழுது கடந்த எட்டு நாட்களில் நடந்தேறியது என்று கூறி மேலும் ஒரு மணி நேரம் அங்கிருந்த பக்தர்களுக்கு உபதேசம் அளித்து நாமாவளிகள் சிலவற்றைப் பாடிப் படிப்பித்து வைத்து. மங்கள ஆரத்தியை ஏற்றுக்கொண்டு எப்பொழுதும்போல் மேல்மாடிக்கு விரைவாக படியேறிச் சென்று, பக்தர்களை ஆசீர்வதித்தார்.

S. S. S.

**சிவசக்தி சொரூப ஸ்ரீ ஸத்ய ஸாயிபாபா நம:**

S. S. S.